# சனாதன தர்மமும்! சத்தியமும்!

சுவாமி பிரபஞ்சநாதன்



பராவித்யா வழங்கும்

பரம[தன்]னை அறியும் பாடங்கள்

# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சனாதன தர்மமும்! சத்தியமும்! |
| ஆசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | உபதேசம் |
| முதற்பதிப்பு | : | 2021 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 60 |
| தாள் | : | A5 (5.83” X 8.27”) |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| கட்டமைப்பு | : | சாதாபைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | அகவிழிப்பு |

]ஓம் ஸ்ரீ குருப்யோ நம:

# சனாதன தர்மமும்! சத்தியமும்!

## 1. சனாதன தர்மம்

“**சனாதன**" என்றால் அழியாத என்று பொருள். தர்மம் என்பதற்கு நேரிடையாக ஒரே ஒரு வார்த்தையில் பொருள் கூற வேண்டுமானால், ‘**எது அனைத்துக்கும் ஆதாரமோ அதுவே தர்மம்**’ என்று பொருள் கொள்ளலாம்.

ஆக சனாதன தர்மம் என்றால், அனைத்திற்கும் ஆதாரமான எது ஒன்று எப்பொழுதும் நிலையாக நிலைத்து இருக்கின்றதோ, அதுவே ‘**சனாதன தர்மம்**’ எனப்படுகின்றது.

அதாவது, ‘**தர்மம்**’ என்பது எல்லாவற்றையும் எற்றுக் கொண்டு, அவைகளைத் தழுவிக்கொள்வது, ‘**அதர்மம்**’ என்பது அதற்கு எதிரானது.

இந்த தர்மத்தை எந்த பெயரில் வேண்டுமானாலும், எல்லோரும் அழைத்துக் கொள்ளலாம், காரணம், அது ஒன்று மட்டுமே என்றும் ‘**இருப்பு**’ கொண்டுள்ளது.

அது ஒன்று மட்டுமே இப்பிரபஞ்சத்தில் ஆரம்பமும் முடிவும் இல்லாமல் இருக்கிறது.

அதையே "**இறைவன்**" என்றும் அழைக்கப்படுகின்றது.

இந்த தர்மம் ஒன்றே எல்லா மதங்களும், மத குருமார்களும், கோவில்களும், தர்க்காக்களும், சர்ச்சுகளும், சமயங்களும், தோன்றுவதற்கும் முன்பு இருந்தது.

இது ஒன்றே எந்த இறைத் தூதர்களையும் சாராமல், இறைவ [தன்]னை மட்டுமே சார்ந்து இருக்கின்றது.

எது? எல்லா காலத்திற்கும், எல்லா மனிதர்களுக்கும் மிகவும் உகந்ததோ!, எது? முழுமையாகவும், பகுதியாகவும் இருக்கின்றதோ, எது? பாரபட்சமின்றி எல்லோரையும் ஏற்றுக் கொண்டு தழுவுகின்றதோ அதுவே, '**சனாதன தர்மம்**' ஆகும்.

'**சனாதன தர்மம்**' என்பதை தமிழில் '**அழியாத அறம்**' எனவும் மொழிப் பெயர்க்கலாம்.

அத்தகைய '**அறம்**' (தர்மம்) என்பது அனைத்திற்கும் ஆதாரமானது. ஆனால், '**மதம்**' என்பது ஒரு நிறுவப்பட்ட ஒரு கட்டமைப்பை குறிக்கிறது, இது ஒரு இறை தூதரையோ அல்லது ஒரு புனித நூலையோ சார்ந்து இருப்பது.

ஆனால், '**சனாதன தர்மம்**' உயிர்கள் அனைத்தையும் ஒன்றிணைக்கின்றது, அவைகளை அப்படியே பாகுபாடு இன்றி, எல்லாவற்றையும் அரவணைக்கிறது.

அதனால்தான் இந்த சனாதன தர்மத்தில் வாழ்பவர்கள் எல்லோருமே ஒரே குடும்பத்தைச் சார்ந்த '**வசுதைவ குடும்பகம்**' என்கின்ற, இந்த "**உலகமே ஒரு குடும்பம்**" என்கின்ற அரிய உண்மையை அனைவருக்கும் பறைசாற்றுகின்றது.

இந்த சனாதன தர்மத்திர்கு என்று எந்தவிதமான, திட்டவட்டமான சட்டதிட்டங்கள் எதுவும் கிடையாது.

எதையும் எதிர்த்து கேள்வி கேட்கும் முழு சுதந்திரத்தை அது முழுமையாகத் தருகின்றது. அந்த முழுமையை அறியத் துடிக்கும் துடிப்பானவர்களுக்கும் அது உபதேசிக்கின்றது.

மற்றவர்களின் எவருடைய ஆதிக்கத்தையும் அது விரும்பாதது, அதே சமயம், எதையும் அறிவுச் சுடரால் அலசி ஆராயச் சொல்கிறது.

அது யாரையுமே சாராதது. தனித்து நிற்பது.

இந்த சனாதன தர்மத்தின் ஒரே உண்மையை யாராலும், மற்ற மதங்களை பரப்புவதுப்போன்று, பரப்பப்பட வேண்டிய அவசியமில்லாதது.

ஆகவே, பொய்களுக்கு வேண்டுமானால் ஆயிரம் முகங்கள் இருக்கலாம், ஆனால், உண்மைக்கு ஒன்று தானே இருக்க முடியும்?

அந்த ஒன்றே "**சனாதன தர்மம்**" எனப்படுகின்றது.

அத்தகைய அந்த உன்னதமான சனாதன தர்மம் மனிதனின் வாழ்வியல் நெறிமுறைகளை “**புருஷார்த்தம்**” என்ற முறையில், மனிதன் துன்பம் இன்றி, நிலையான இன்பத்துடன், நீடித்த இந்த வாழ்க்கையை வாழ்வதற்குத் தேவையான நான்கு இலட்சியங்களை போதிக்கின்றது.

அவைகள்,

1. **தர்மம் (அறம்)**
2. **அர்த்தம் (பொருள்)**
3. **காமம் (இன்பம்)**
4. **மோக்ஷம் (வீடு பேறு)**

என்ற நான்கு வாழ்வியல் நெறிமுறைகளாகும்.

இந்த நான்கு நெறிமுறைகளைப் பற்றித்தான் வேதத்தில் முதன் முதலாகப் பேசப்படுகின்ற முக்கியக் கருத்தாகக் காண உள்ளோம்.



# 2. புருஷார்த்தம்

வேதத்தில் முக்கியமாகப் பேசப்படும் பகுதியாக இந்த "**புருஷார்த்தம்**" எனப்படுகின்ற புருஷனின் இலட்சியத்தைப்பற்றி கூறுகின்றது.

அதாவது, **புருஷன் + அர்த்தம்** என்பதற்கு ஏற்ப, மனிதனின் ஆசைக்கு உரிய விஷயம் எதுவோ, அதுவே '**புருஷார்த்தம்**' எனப்படுகின்றது.

சமஸ்கிருத மொழியில் இந்த புருஷார்த்தம் என்பதை, "**தர்மார்த்தகாமமோக்ஷம்**" (**தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம்**) எனப்படுகின்றது. அதையே நம்முடைய தமிழ் மொழியில் "**அறம், பொருள், இன்பம், வீடு**" எனப்படுகின்றது.

"**புருஷன்**" என்றால் "**மனிதன்**".
"**அர்த்தம்**" என்றால் "**பொருள்**".

அதாவது, மனிதனின் ஆசைக்குரிய விஷயம் அல்லது "**இலட்சியம்**" என்பதாக இந்த '**புருஷார்த்தம்**' உள்ளது.

அதாவது, மனிதன் அவசியம் அடைய வேண்டிய அத்தியாவசியப் பொருள் பற்றியும், அந்த பொருளை அடைவதற்கான அவனது ஆசையைப் பற்றியும், அதனால் உண்டாகும் பலனைப்பற்றியும் கொண்ட இலட்சியமாக இந்த "**புருஷார்த்தம்**" இருக்கின்றது.

அதாவது, மனிதனின் மகத்தான இலட்சியமாக இந்த "**புருஷார்த்தம்**" உள்ளது.

சரி!, மனிதனுக்கு ஏன் இலட்சியம் இருக்க வேண்டும்?

இந்தப் பூவுலகில் பல்வேறு விதமான ஜீவராசிகள் வாழ்கின்றன. அவைகளின் வாழ்க்கையின் நோக்கம் உண்ண உணவு, உறங்க உறைவிடம் என்று உள்ளபோது, மனிதன் மட்டுமே இந்த உணவு, உறைவிடம் போன்றவைகளைக் கடந்து, அவனது அத்தியாவசித் தேவையாக எது வேண்டும்?, எது வேண்டாம்? என்று தேர்ந்தெடுக்கக் கூடியதான நல்லது, கெட்டதைப் பகுத்துப் பிரித்தறியக்கூடிய "**பகுத்தறிவு**" எனும் '**ஆறாவது அறிவு**' அவனுக்கு மட்டுமே உள்ளது.

ஆனால், மற்ற ஜீவராசிகளுக்கு இவ்வாறு நன்மை, தீமைகளைப் பிரித்தறிந்து, தேர்வு செய்யக்கூடிய வாய்ப்பு இல்லை.

ஆகவே, மனிதன் மட்டுமே தனக்கு எது வேண்டும், வேண்டாம் என்பதில் உள்ள நல்லது, கெட்டதை பிரித்தறிகின்ற பிரத்யேகமான "**பகுத்தறிவு**" கொண்டவன் என்பதினால், எதையும் சரியாகத் தேர்வு செய்வது என்பது, அவனால் மட்டுமே முடியும்.

அப்படித் தேர்வு செய்வதின் அடிப்படையில்தான் அவன் எனக்கு இதுதான் சரியான "**இலட்சியம்**" என்பதையும் எளிதில் தீர்மானிக்கின்றான்.

அந்த வகையிலே, மனிதனுக்கு மட்டுமே உண்டான மகத்தான வாழ்வியல் இலட்சியத்தை '**புருஷார்த்தம்**' என்று சாஸ்திரம் உபதேசிக்கின்றது.

அத்தகைய புருஷார்த்தம் என்பது, **தர்மம் (அறம்)**, **அர்த்தம் (பொருள்), காமம் (இன்பம்), மற்றும் மோக்ஷம் (வீடு பேறு)** என்பனவாக, நான்கு வாழ்வியல் நெறிமுறைகளாக கொடுக்கப் பட்டுள்ளது.

அவைகளில், '**தர்மம்**' என்பதை தமிழ் மொழியில் '**அறம்**' என்று அழைக்கின்றோம்.



# 3. தர்மம் (அறம்)

தர்மம் (அறம்) என்ற வார்த்தைக்கு பொருள்கூற வேண்டுமாயின், வேடிக்கையாக எல்லோரும் அறிந்து வைத்துக்கொண்டுள்ள ஆயிரமாயிரம் அர்த்தங்களை உண்மையாகவே பொருள் கொள்ள முடியாது.

காரணம், அடுத்தவருக்கு உதவி செய்வதுதான் "**தர்மம்**" ('**அறம்**') என்று அனைவருமே அறிந்து வைத்துக் கொண்டு உள்ளனர்.

இவர்கள் '**தர்மம்**' மற்றும் '**தானம்**' என்ற இரண்டிற்கும் உள்ள வித்தியாசத்தை அறியாதவர்கள் என்றே எளிதாகக் கூறலாம்.

ஆகவே, அறம் என்பது செயலா?, சொல்லா?, அல்லது எண்ணமா? என்று விசாரித்துப்பார்த்தால், மனிதனின் ஒவ்வொரு செயலுக்கும் அடிப்படையாக இருப்பது அவனது எண்ணமே ஆகும்.

அந்த வகையிலே, அவனது எண்ணம் தூய்மையாக இருந்தால்தான், அவனது சொல்லும், செயலும் தூய்மையாக இருக்க முடியும்.

எண்ணம் எழுவதற்கு இருப்பிடமாக உள்ள "**மனம்**" மாசுகள் (குற்றங்கள்) இல்லாததாக இருக்க வேண்டும்.

அதாவது, மனதினால் ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களை நீக்கி, சித்தத்தை சுத்தமாக வைத்திருப்பதே இன்றைய மனிதனின் சித்த சுத்திக்கான இன்றியமையாதக் காரியம் எனலாம்.

அதாவது, மனிதன் தேவையற்ற விசய, சுகங்களை விரும்பி, விவேகத்தை இழந்து, வீணாக பல குற்றங்களை புரியக்கூடிய எண்ணங்களை ஏற்றி வைத்துக் கொண்டு, மனம் போன போக்கில் வாழ விரும்புகின்றான்.

அத்தகைய அந்த குற்றமுள்ள மனதின் மாசினைப் போக்குவதற்கு முயலுவதே அறமாகும்.

**மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்**
**ஆகுல நீர பிற.** (குறள் 34**)**

ஒருவன் தன் மனதில் மாசுக்கள் (குற்றங்கள்) இல்லாத நிலையில் இருக்க வேண்டும். அப்படி இருப்பதையே "**அறம்**" என்றும், '**தர்மம்**' என்றும் சாஸ்திரம் கூறுகின்றது.

அத்தகைய மனத்தூய்மை இல்லாத மனிதர்கள் மனம் போன போக்கில் போய்க் கொண்டு, எப்பொழுதுமே எதையாவது செய்துக் கொண்டு, ஆர்ப்பாட்டம் அதிகமாக உள்ளவர்களாக இருப்பார்கள். அவர்களை அறமற்றவர்கள் என்றும், மனதில் மாசுக்கள் நிறைந்தவர்கள் என்றும் இந்தக் குறள் எடுத்துக் காட்டுகின்றது.

இதில், மன மாசுக்கள் என்பது யாது?

மன மாசுக்களைப் போக்குவது எவ்வாறு?

**பொறாமை, பேராசை, கோபம்,** மற்றும் **கடுஞ்சொல்** ஆகியவைகளே மனதின் மாசுக்களாகும்.

**அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்றது அறம்.** (குறள் 35**)**

இவைகள் இல்லாமல் இருப்பதே "**அறம்**" (தர்மம்) எனப்படுகின்றது.

**த்ரிவித$^{4}$ம் நரகஸ்யேத$^{3}$ம் த்$^{3}$வாரம் நாஸ$^{2}$நமாத்மந:** |
**காம: க்ரோத$^{4}$ஸ்ததா$^{2}$ லோப$^{4}$ஸ்தஸ்மாதே$^{3}$தத்த்ரயம் த்யஜேத்** || (**கீதை** 16- 21)

**ஆசை, கோபம், கஞ்சத்தனம்** ஆகிய இந்த மூன்றும் ஆத்மாவை (அறிவை) அறிவதற்குத் தடையாக உள்ள, நாசத்துக்கான நரகத்தின் நுழைவாயில் என்று **பகவத்கீதை** பறைசாற்றுகின்றது.

இந்த விளக்கங்களின் அடிப்படையில் அலசிப்பார்க்கும் பொழுது, '**அறம்**' என்பது ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்கள் அற்ற நிலை என்பதை எளிதாக அறிந்துக் கொள்ள முடிகின்றது.

இந்த ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களே, எல்லா விதமான சொல், செயல்களுக்கு காரணமாக உள்ளது.

இதில் தமிழ் மொழியில் இந்த அறத்தைப் பற்றி அறிஞர்கள் கூறுவது என்னவெனில், '**அறு**' என்ற வினைச் சொல் அடியாகப் பிறந்ததே '**அறம்**' என்னும் சொல் என்கின்றனர்.

இச்சொல்லுக்கு அறுத்துச் செல், வழியை உண்டாக்கு, துண்டித்துக் கொள், அல்லது வேறுபடுத்து என்ற பலவகைப் பொருள்கள் வழங்கியுள்ளனர்.

இத்தகைய சொல் ஆராய்ச்சியின் அடிப்படையில்கூட "**அறம்**" என்ற சொல்லிற்குப் பின்வருமாறு விளக்கம் கூறலாம்.

மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறைகளின் மொத்தத் தொகுதியே அல்லது முழுநிறை வடிவமே "**அறம்**" என்று கூறுவர்.

'**பிறவிதோறும் மனிதனைப் பற்றிக்கொண்டு வரும் தீய வினைகளை அறுத்தெறிவதே அறம்**' என்ற ஆன்மீக விளக்கமும் இதற்குத் தரப்படுவது உண்டு.

எப்படியெல்லாம் இந்த உலகம் '**சீரழிந்து**' கொண்டு இருந்தாலும், யுக யுகமாக உலகைத் தாங்கிப் பிடித்து நிற்கும் ஒரு விழுமியம் இருக்கின்றது என்றால், அதுதான் **அறம்.**

**‘அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்’** என்று தவறு செய்யும் ஆட்சியாளர்களை கொன்று போடும் வல்லமை கொண்டது **‘அறம்’** என்று சிலப்பதிகாரத்தில் அறத்தைப்பற்றி அதிகமாக போற்றப்படுகிறது.

[**கூற்று** என்றால், **மரணம்** அல்லது **எமன்** என பொருள்]

திருவள்ளுவர் தமது குறட்பாக்களில் முப்பால்களில் முதல் பாலாக அறத்துப்பாலை வைத்தார். அறம் பாடுவது தமிழ் புலவர்களின் வலிமையான ஆயுதமாகவும் பயன் படுத்தப்பட்டு வந்திருக்கிறது.

அறிவை இழிவு படுத்தும் எவரையும், அறம் பாடி ஒழிக்கும் வல்லமையை தமிழ்ப் புலவர்கள் காலந்தோறும் கைகளில் வைத்திருந்தார்கள்.

மனிதர்கள் தங்களது வாழ்க்கை முறையை சிறப்பான முறையில் ஒருங்கிணைந்து வாழ்வதற்காக உருவானதே அறம்.

நம்முடைய சனாதன தர்மத்தில் அறம் என்பதை, தனி மனித தர்மம், சமுதாய தர்மம், தேசத்தின் தர்மம் என ஒன்றைச் சார்ந்து ஒன்று உள்ளது என்றும், அது இறுதியில் ஒரு தனி மனித தர்மத்தினால் மட்டுமே, இந்த ஒட்டு மொத்த தேசத்தின் தர்மம் இருக்கின்றது என்றும், அந்த தர்மத்திற்கு எது ஆதாரமாக உள்ளதோ, அந்த ஆதாரமான **“உண்மை”** ஒன்று மட்டுமே உள்ளது.அதுவே **தர்மம்** அல்லது **அறம்** எனப்படுகின்றது.

அந்த உண்மை உணர்வோடு எப்பொழுதும் இணைந்து இருப்பதே நம் இயல்பாக இருக்குமானால், அதுவே “**சரியான தர்மம்**” (உண்மையான அறம்) ஆகும்.

## 4. அர்த்தம் (பொருள்)

சனாதன தர்மம் போதித்த **தர்ம:, அர்த்த: காம:, மோக்ஷ:** என்பதில், “**அர்த்தம்**” என்பதை ‘**பொருள்**’ என்றும், அவைகள், நம்முடைய அத்தியாவசிய வாழ்வியலுக்குத் தேவையான அவசியமான பொருள்கள் என்றும் நாம் கருதிக் கொள்வதில் தவறேதும் இல்லை.

இருப்பினும், இன்னும் சற்று இதைப்பற்றி விசாரித்து விபரம் அறிய ஆசைப்பட்டால், அது சனாதன தர்மம் கூற வருகின்ற என்றுமே அழியாத, எங்கும் நிறைந்து இருக்கின்ற, நிலையானப் பொருளாகிய அந்த எல்லையற்ற “**பரம்பொருள்**” என்பதைப் பற்றி எளிதாகக் கூற வருவதையும் அறியலாம்.

அந்தப் பரம்பொருளை அடைவதைப் பற்றித்தான் அனைவரும் அறிந்துக்கொள்ள வேண்டுமே ஒழிய, அதை விடுத்து, அழிந்துப் போகக்கூடிய அற்ப பொருளைப் பற்றியும், அதை அடைவதைப் பற்றியும் அறிஞர் பெரு மக்களின் பெருமைமிகு சாஸ்திரம் பெரிதாகக் கூறுவது கிடையாது என்பதையும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

பொதுவாக, நாம் நம்முடைய அன்றாட வாழ்வில் வசதியாக வாழத் தேவையான ***பணம், வீடு, கார், டி.வி. ஃபிரிட்ஜ், வாசிங்மெஷின்*** போன்ற பொருள்களை மட்டுமே '**பொருள்**' என்று கருதிக் கொண்டுள்ளோம்.

அந்தப் பொருள்களை அடையவே அல்லும், பகலும் அரும்பாடுபட்டு ஓடிக் கொண்டிருகின்றோம்.

அப்படி, நாம் சம்பாதித்து, சேர்த்து வைத்துள்ள பயனற்ற பல பொருள்களைப் பற்றிய அடிப்படை அறிவுகூட இன்றி, அவைகளைப் பயன்படுத்தி, பல்வேறு நோய்களுக்கு நாம் உட்படுகின்றோம்.

அதேசமயம், நாம் சம்பாதித்து வைத்துள்ள அதி அற்புதமானப் பொருள் ஒன்றை அவசியமில்லாமல் அழிவுப் பாதைக்கு அனாவசியமாக அழைத்துச் செல்கின்றோம்.

ஆம்! நாம் அடைந்த அந்த அற்புதப் பொருள் ஒன்று உண்டென்றால், அது நம்முடைய இந்த "**உடல்**" எனலாம்.

'**அரிது!, அரிது! இந்த மானிட உடலில் பிறத்தல் அரிது!**' என்கின்றார் அறிஞர் அவ்வையார்.

அவரைப்போன்றே, மற்ற அறிஞர் பெருமக்களும், இந்த உடலைப் பற்றிப் பலவாறாகப் பாடியுள்ளனர்.

**"நந்தவனத்தில் ஓர் ஆண்டி - அவன்**
**நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டி**
**கொண்டு வந்தான் ஒரு தோண்டி - மெத்தக்**
**கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி"**

மேலோட்டமாகப் பார்த்தால், இது ஒரு சாதாரணமான வேடிக்கைப் பாடல் போலத்தான் தோன்றுகின்றது. ஆனால், வாழ்க்கையின் உன்னதமான உயர் தத்துவத்தை கடுவெளி சித்தர் நான்கு வரிகளில், மிக அற்புதமாக விளக்கியுள்ளார்.

மனிதன் இந்த நந்தவனமாகிய உலகத்தில் உல்லாசமாக வாழ ஆசைப்பட்டு, நான்கு + ஆறு மாதங்களாக, அதாவது பத்து மாதங்கள் மாதாவின் வயிற்றில் இருந்துக் கொண்டு, ஒரு உடலைக் கொண்டு வந்தான் என்றும், அதன் அருமை தெரியாமல், கண்டபடி, கண்டதைக் கண்டு, உண்டு, இந்த உடலைப் போட்டு உடைத்து விட்டான் என்கின்றார்.

இந்த உடலாகியத் தோண்டியை சரியான காரணத்திற்கு மட்டுமே பயன்படுத்த வேண்டி, அந்த பரம்பொருள் இந்த உடல் என்னும் கோயிலில் குடி வந்துள்ளது என்றும், அந்தக் கோயிலை சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என்றால், உள்ளம் உண்மையை உணர வேண்டும் என்றும் கூறுகின்றார்.

**‘உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்**
**வள்ளற் பிரானுக்கு வாய் கோபுரவாயில்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்தும் காளாமணி விளக்கே’**

திருமூலர் இறைவனை (அறிவை) அறிவதற்கு, ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்கள் ஏதுமின்றி, சித்தம் சுத்தமாக இருப்பின், சதை, எலும்புகளால் ஆன, இந்த உடல் மற்றும் அதன் ஒளிபொருந்திய பிரகாசமான ஐம்புலன்களைக் கொண்டே, அந்த அறிவை (ஆன்மாவை) அறிந்து, அதனை இந்த உள்ளமெனும் பெருங்கோயிலில் '**சிவம்**' ஆக இருத்தி, அந்தச் சிவத்துடன் இரண்டறக் கலந்து இலயம் அடைவது ஒன்றே, இந்த உடல் "**சவம்**" ஆவதற்கு முன்பு அவசியம் நிகழ வேண்டிய நிகழ்வு என்கின்றார்.

ஆனால், நாம் நமக்கு கிடைத்துள்ள இந்த இனிய உடலைக் கொண்டு, அறிய வேண்டிய அரிய அறிவுப் பொருளை அறிந்துக் கொள்ளாமல், அறியாமையினால், மற்ற அனைத்தையும் அறிந்துக் கொண்டு, ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களினால், அழியக் கூடிய அனேகவிதமான அற்ப பொருள்களை அடைய ஆசைப்படுகின்றோம்.

அதற்கு அடையாளமாக அற்ப ஆசைகளினால் ஆட் கொள்ளப்பட்ட மனிதன் தற்போதைய '**கொரோனா**' என்ற கொடிய நோய் தொற்றில் சிக்கிக் கொண்ட மற்றவர்களை மனித நேயத்தை இழந்து, மதிகெட்டு அவர்களிடமும் பொருளாசையினால், பலவாறாகப் பணத்தை பறிக்கின்ற பண்பற்ற செயலைச் செய்கின்ற சிலர், அந்த சிவத்தை "**அன்பே சிவம்**" என்று அறியாமல், அறியாமையினால் இதுப் போன்ற காரியங்களில் ஈடுபடுகின்றனர்.

அதன் காரணமாக, சனாதன தர்மம் போதித்த **மாத்ரு தேவோ பவ, பித்ரு தேவோ பவ, அதிதி தேவோ பவ, ஆச்சாரிய தேவோ பவ** என்ற எளிய உண்மையை உணராமல், உள்ளம் தூய்மையற்று இருக்கின்றார்கள்.

அதாவது, **அன்னையை போற்றுங்கள்!, தந்தையை போற்றுங்கள்!, உறவுகளைப் போற்றுங்கள்!, ஆசிரியரை போற்றுங்கள்**! என்பதையெல்லாம் மறந்து, ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களால், எல்லையில்லா அன்பை அறிய முடியாமல், மற்றவர்களை மதிக்கத் தவறுகின்றார்கள்.

இந்த மன நிலை இன்றைய மனிதர்களிடம் மாறியாக வேண்டும்!

இயற்கையின் **கொடுக்கல், வாங்கல்** நியதியைப்பற்றி, இனியாவது நாம் அனைவரும் அறிந்துக் கொள்ள வேண்டும்.

அதாவது, நாம் அன்பைக் கொடுத்தால், நமக்கு அன்பு திரும்பக் கிடைக்கும், சிரிப்பைக் கொடுத்தால், சிரிப்பு நமக்குத் திரும்பக் கிடைக்கும். அதுவே, கோபத்தை, துயரத்தை, மற்றவர்களுக்குக் கொடுத்தால், அதுமட்டும்தான் நமக்குத் திரும்பக் கிடைக்கும் என்ற எளிய உண்மையை எல்லோரும் அறிய வேண்டும்.

அதையே, அன்றைய அறிஞர்கள், "**தீதும், நன்றும் பிறர் தர வாரா**!" என்றனர்.

ஆகவே, நமக்கு நன்மை உண்டாவது, தீமை உண்டாவதும் நம்மிடத்திலேயே இருக்கின்றது என்பதையும் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்.

இதுவே, **‘இயற்கையின் கொடுக்கல், வாங்கல் நியதி’** எனப்படுகின்றது.

இந்த பிரபஞ்சமே, இதுப்போன்ற கொடுக்கல் வாங்கல் நியதிக்கு கட்டுப்பட்டுத்தான் இயங்குகின்றது என்பதை எளிதாக இந்த சனாதன தர்மம் எடுத்துக் காட்டுகின்றது.

உதாரணமாக, நாம் சுவாசிக்கின்ற பிராண வாயுவை, மரங்கள் நமக்கு கொடுப்பதற்குக் காரணம், நாம் வெளியே விடுகின்ற நமக்குத் தேவையற்ற கரியமில வாயுவை மரங்கள் பெற்றுக் கொண்டு, நமக்கு பண் மடங்கு பிராண வாயுவைத் திருப்பிக் கொடுக்கின்றன.

அதுப்போன்றே, நாம் ஒரே ஒரு தேங்காயை மட்டும் இந்த மண்ணில் ஊன்றி வைத்தால், இந்த பூமி அந்த ஒரு தேங்காயைப் பெற்றுக் கொண்டு, பல மடங்கு தேங்காய்களை நமக்கு மீண்டும் திருப்பிக் கொடுக்கின்றது. இதுவே இயற்கையின் நியதி.

ஆகவே, நாம் நல்லதோ, கெட்டதோ அதை சிறிது செய்தாலும், அதன் பலனாக நமக்கு பலமடங்கு நல்லது, கெட்டது மீண்டும் நமக்கே திரும்பி வருகின்றது.

இதனைத்தான் சாஸ்திரம் ‘**கர்மவினை**’ என்கின்றது.

இதனை நம் பெரியவர்கள் பாமரனுக்கும் புரியும் வகையில், “**தினை விதைத்தவன், தினை அறுப்பான்**!, **வினை விதைத்தவன் வினை அறுப்பான்**!” என்றனர்.

அந்த வகையிலே, நாம் நம்முடைய தாய், தந்தை, ஆசான், மற்றும், நம் வாழ்வின் நெருங்கிய உற்றார், உறவினர்கள், நண்பர்கள், நல்லோர்கள் என அனேக மதிப்பிட முடியாத அருட்செல்வங்களை நம் வசம் வைத்திருந்தும், அவர்களின் மூலமாக அடையப்பட வேண்டிய, அரிதான அன்பினை அடைய முடியாமல், அழியக்கூடிய அற்ப பொருள்களில் ஆசைக் கொண்டு, அந்த அறிவை அறிய முடியாத அவல நிலைக்கு ஆளாகியுள்ளோம்.

பொதுவாக, சாஸ்திரம் ‘**பொருள்**’ என்பதை **அர்த்த:** என்பதின் நோக்கம் என்னவெனில், அது மனிதனின் ஆசைக்கு உரிய அத்தியாவசியப் பொருளாக அறிய முடிகின்றது.

அதன் அடிப்படையில்தான் **“புருஷார்த்தம்”** என்பதில், *“**புருஷன்**”* என்பதை ‘**மனிதன்**’ என்றும், *“**அர்த்தம்**” (பொருள்)* என்பதை அடைய வேண்டிய அரிதான ‘**இலட்சியம்**’ என்றும் அழைக்கப்படுகின்றது.

அத்தகைய **மனிதனின் இலட்சியம்** என்பது, அந்த அரிதான பரம்பொருளை அறிந்துக் கொண்டு, அதை மட்டுமே

அடையத்தான் இருக்க வேண்டுமேயொழிய, அழியக்கூடிய அற்ப பொருள்களை அறிவதும், அடைவதும் என்பது கிடையாது.

எனவே, ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களின் வாயிலாக, பொருள் ஆசைக் கொண்டு, ஒரு செல்போனையோ, அல்லது ஒரு மோட்டார் சைக்கிளையோ வாங்கி அடைகின்ற மகிழ்ச்சி என்பது, தற்காலிகமானது.

அந்த மகிழ்ச்சிக்காக மட்டுமே, நாம் அனேக முயற்சிகளை மேற்கொண்டு, அங்கும், இங்கும் அலைந்து அவைகளை அடைய முயற்சிக்கும் பொழுது, அனேக துன்பங்களை அடைகின்றோம்.

இங்கு சற்றே நாம் யோசித்துப் பார்க்க வேண்டும்!

துன்பத்திற்காக எந்த முயற்சியும் செய்யாமலேயே அது வரும் பொழுது, இன்பத்திற்கு மட்டும் ஏன் தனியாக நாம் முயற்சியை மேற்கொள்ள வேண்டும்?

இது சற்று சிந்திக்க வேண்டிய விசயம்!.

இதிலிருந்து, எந்த முயற்சியும் எடுக்காமலேயே, நமக்கு துன்பம் வருவதை தவிற்க முடியாத பொழுது, இன்பம் அடைவதற்கு மட்டும் ஏன் அதிக முயற்சிகள் எடுக்க வேண்டும்?

எனவே, வருவது, இன்பமோ, துன்பமோ? அது, நம் ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களைச் சார்ந்தது. எவர் ஒருவர் இந்த எண்ணங்களை எல்லாம் உற்று கவனித்து, விழிபுற்ற புத்தியினால், விழித்துக் கொள்கின்றாரோ, அவரே, அந்த அரிய பரம்பொருளை அறிந்த அறிஞராகின்றார். அவருக்கு மட்டுமே இனி அற்ப பொருள்களின் மீது பற்று (ஆசை) இருக்காது.

மற்றபடி பற்றற்ற வாழ்க்கையை வாழ விரும்பி, துறவறத்தை மேற்கொள்கின்றேன் என்று பெரும்பாலானவர்கள் மேலும் சில பெருமையற்ற விற்பனையாளர்களாக வியாபாரம் செய்கின்றனர்.

எனவே, "**துறவு**" என்பது, வீட்டையும், நாட்டையும் துறப்பது அல்ல!, அது ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களால் ஆன ஏராளமான ஆசைகளைக் கொண்ட மனதை துறப்பதே ஆகும்.

"**சினம்இறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்**
**மனம்இறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே!**" - பராபரக்கண்ணி 189.

ஆகவே, கோபத்தை விட்டாலும், அட்டமா சித்துக்கள் பெற்றாலும், ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்கள் உள்ள மனதை விட்டு விடாமல், அந்த அறிவுப் பொருளாகிய "**பரம்பொருள்**" நமக்கு வாய்க்கவே வாய்க்காது.

# 5. காமம் (இன்பம்)

படைக்கப்பட்ட உயிரினங்களுக்கு எல்லாமே ஒரு உன்னத நோக்கம் உண்டென்றால், அதுதான் ஆசை. ஆம்! அந்த ஆசைகளினால், அவைகள் அடைய விரும்புவது நிலையான ஆனந்தத்தை மட்டுமே.

ஆனால், அந்த ஆனந்தம் எதில் உள்ளது என்பதை அறிய முடியாமல், அவைகளின் பல்வேறு பிறவிகளாக ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான எண்ணங்களின் பிடியில் சிக்கிக் கொண்டு, அறியாமையினால் அற்ப விசய, சுகங்களில் அந்த ஆனந்தம் இருப்பதாக எண்ணிக் கொள்கின்றன.

அந்த ஆனந்தத்தை அடைய அல்லும், பகலும் அயராது உழைக்கின்றன. அந்த உழைப்பை மட்டுமே அவைகள் தங்கள் இலட்சியமாகக் கருதுகின்றன.

இதிலே, மனிதன் மகத்தான "**பகுத்தறிவு**" என்ற ஆறாம் அறிவைக் கொண்டவன் என்பதினால், அவனால், மட்டுமே அவன் இலட்சியத்தை சரியாகத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு கொடுக்கப்பட்டுள்ளது.

ஆனால், அனைவருக்கும் அவரவர்கள் வாழ்க்கையில் ஒவ்வொருவிதமான இலட்சியம் இருந்தாலும், எல்லோருமே

ஏக மனதாகத் தேர்ந்தெடுக்கின்ற ஒரே ஒரு இலட்சியம் உண்டென்றால் அது, எது தெரியுமா?

அதுதான் ஆசை! என்கின்ற '**காமம்**' அல்லது "**இன்பம்**" எனப்படுகின்றது.

இந்த காமம் என்பதை, இச்சை அல்லது தன்னிலை மறந்த ஆசை என்றும் பொருள் கொள்ளலாம்.

ஆனால், அனைவருமே காமம் என்பதை ஆண், பெண் என இரு பாலினத்தாருக்குள்ளும் எழும், உடல் ரீதியான இச்சை என்பதாகக் கருதிக் கொண்டு, அதற்கு "**காமம்**" என்று பெயரிட்டு அழைத்துக் கொள்கின்றனர்.

அதனால், "**காமம்**" என்பதை இச்சை அல்லது ஆசை என்பதற்கு அடிப்படையாகக் கருதுவதினால்தான், அதை "**இன்பம்**" என்றும் கூறுகின்றோம். ஆகவே, அது எல்லா விசய, சுகங்களின் மீதும் கொள்ளும் இச்சைக்கும் பொருந்தும்.

ஆனால், அதே ஆசையைக் கொண்டு, அந்த அறிவை (ஆன்மாவை) அறிய முற்படும்பொழுது, அது ஆனந்தமாக மாறுகின்றது.

அது எப்படி எனில்,

ஒரு ஆற்றலை அழிக்கவோ, ஆக்கவோ முடியாது. ஆனால், அந்த ஆற்றலை மற்றொரு ஆற்றலாக மாற்றிவிட முடியும் என்பதை எல்லோரும் அறிந்ததே ஆகும்.

உதாரணமாக, கண்களால் காண முடியாத மின்சார ஆற்றலை அறிந்துக் கொண்டதினால், அதை எப்படி ஒளி, ஒலி ஆற்றல்களாக மாற்றி நம் சாதாரண கண்களால் காணக்கூடிய மின் விளக்குகளாகவும், சாதரண காதுகளால் கேட்கக்கூடிய ஒலிப்பேழைகளாகவும் மாற்றிக் கொண்டு, நம் அனுபவத்திற்கு கொண்டு வருகின்றோம் அல்லவா?

அதுப்போன்றே, அந்த அறிவை (ஆன்மாவை) அறிய ஆசைக்கொண்டால், அதை ஆனந்தமாக மாற்றிக் கொள்ளவும், அதை நம் அனுபவமாக ஆக்கிக்கொள்ளவும் முடியும்.

அதற்கு என்ன செய்ய வேண்டும்?

ஏற்றி வைக்கப்பட்ட ஏட்டுக் கல்வியில் அறிவியல் பாடம் படித்தவனுக்கு, மின் அலைகளை, ஒளி, ஒலி அலைகளாக மாற்றக்கூடிய மதிநுட்பம் இருப்பதினால், அதை அவனால் அதிவிரைவாக மாற்றத்திற்கு உட்படுத்த முடியும்.

அதுப்போன்று, அந்த அறிவாகவே இருக்கின்ற நாம் நம் உண்மை இயல்பை அறிந்துக் கொண்டால், அந்த அறிவு ஆற்றலை (இறையாற்றலை), அதிவிரைவாக ஆனந்தமாக மாற்றத்திற்கு உட்படுத்தவும் முடியும்.

ஆனால், அதற்குத் தடையாக இருப்பது, நாம் ஏற்கனவே ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான எண்ணங்கள் என்பதினால், அந்த எண்ணங்களால் ஆட்கொள்ளப்பட்ட மனம், அதன் போக்கில் போய்க் கொண்டு, நம்மை அந்த அறிவாக பிரகாசிக்க முடியாமல் தடுக்கின்றது.

அதாவது, மின்சார ஆற்றல் அனைத்து பக்கங்களிலும் பாய்ந்து விடாமல் தடுத்து, தேவையான பகுதிகளில் மட்டும் அதைப் பயன்படுத்த வேண்டி, அதற்குத் தடையாக (Insulator) மின் கடத்தாப் பொருட்களைக் கையாள்வதுப் போன்று, நம் உண்மை அறிவு உன்னத ஆற்றல்களுடன் பிரகாசிப்பதற்குத் தடையாக, ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களாக நமது மனம் இருப்பதை நாம் அறியாமல் இருக்கின்றோம்.

மின் கடத்தாப் பொருட்களின் வாயிலாக, மின்சாரம் பாய்வது தடைப்படும் பொழுது, அந்த மின்சார ஆற்றல், ஒளி, ஒலி ஆற்றல்களாக மாறுகின்ற காரியமும் தடைப்படுகின்றது.

அவ்வாறே, நம் மனம் ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களின் வாயிலாக, நம் உண்மை இயல்பான "**அறிவு**" பிரகாசிப்பதற்கு தடையாக இருக்கின்றது.

ஆகவே, அந்த உண்மை அறிவு பிரகாசிக்காமல், உண்மை ஆனந்தம் உண்டாகாது.

ஆனால், நாமோ அந்த "**ஆனந்தம்**" எதில் இருக்கிறது என்பதை அறியாமல், ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களின்

காரணமாக அதை அடைய வேண்டி, அயராது அங்கும், இங்கும் வெளியே ஓடிக் கொண்டிருக்கின்றோம்.

அதிலே, அவரவர்கள் எத்தகைய எண்ணங்களை ஏற்றி வைத்துக் கொண்டுள்ளனரோ, அதற்கு ஏற்றவாறான விசய, சுகங்களில் மட்டுமே '**இன்பம்**' இருப்பதாக நினைத்துக் கொள்கின்றனர்.

இவ்வாறு, இவர்கள் ஏற்றி வைத்துக் கொண்ட அற்ப எண்ணங்களினால் உண்டாகும் ஆசைகளினால் ஆனந்தம் வருவதை வைத்து, இதுதான் **இன்பம், மகிழ்ச்சி, சந்தோசம்,** என்று எடுத்துக் கொள்கின்றனர்.

இவர்கள் யாருமே, அந்த அறிவை (இறைவனை) அறியாத அறியாமையினால், அவ்வப்போது வந்து, போகின்ற அற்ப சந்தோசத்தையே "**ஆனந்தம்**" என்று தவறாகவும் கருதிக் கொள்கின்றனர்.

ஆனால், அந்த "**ஆனந்தம்**" என்பது, உண்மையில் எதில் இருக்கின்றது என்பதை, என்று நமக்கு கொடுக்கப்பட்ட '**பகுத்தறிவு**' கொண்டு, பகுத்து அறிந்துக் கொள்கின்றோமோ, அப்பொழுதே, நாம் அந்த **உண்மை, அறிவு, ஆனந்தம்** ஆகிய அந்த "**சச்சிதானந்தம்**" எது என்று அறிந்துக் கொள்கின்றோம்.

ஆனால், அனைவருக்கும் இந்த அரிதான '**உண்மை**', '**அறிவு,** '**ஆனந்தம்**' என்ற "**சச்சிதானந்தம்**" பற்றி அறிந்துக்

கொள்ள ஆர்வம் காட்டாததினால், அவர்களாகவே அந்த “**ஆனந்தம்**” என்பது, அற்ப பணத்தால் வருவது என்று கருதிக் கொள்கின்றனர்.

அத்துடன், அவர்கள் நினைத்துக் கொண்ட அந்த ஆனந்தத்தை அடைய வேண்டி, அதிக பணத்தை சம்பாதிக்க பல வழிகளிலும், மிகக்கடுமையாக உழைக்கின்றனர்.

அவ்வாறு, அவர்கள் கடும் முயற்சியால் கஷ்டப்பட்டு உழைத்தால், அந்த பணத்தை சம்பாதித்து, ஆனந்தத்தை அடைந்து விடலாம் என்று கருதிக் கொண்டு கண்டபடி அங்கும், இங்கும் அலைந்துக் கொண்டு, ஆறறிவு படைத்த அற்புத மனிதன் என்பதை மறந்து, ஐந்தறிவு கொண்ட அற்ப மிருகம் போன்றே ஓடிக்கொண்டிருக்கின்றனர்.

அவ்வாறு அவர்கள் ஓடி, ஓடி கஷ்டப்பட்டு உழைத்த கடின உழைப்பின் காரணமாக, ஆனந்தம் வருவதற்கு பதிலாக, ஆர்ப்பாட்டம் அதிகமாகி, அறிவை அறிய முடியாமலேயே இந்த மண்ணில் அடங்கியும் விடுகின்றனர்.

உண்மையில் அவர்கள் எவ்வளவுதான் கஷ்டப்பட்டு, அங்கும், இங்கும் ஓடி, ஓடி பணம் சம்பாதித்தாலும், அதன் வாயிலாக அவர்கள் அடைந்த அந்தப் பணம் என்னவோ மிக, மிக சொற்பமே ஆகும்.

அத்துடன் அந்த பணத்தை அவர்கள் ஓடிய ஓட்டத்தின் காரணமாக உண்டான உடல் உபாதைகளுக்காக செலவுகள்

செய்துவிட்டு, மீண்டும் பழையபடி அந்த பணத்தைத் தேடிக் கொண்டு, ஓடிக் கொண்டுள்ளனர்.

பொதுவாக, பணம் சம்பாதித்து, அதன் வாயிலாக அவர்கள் ஆனந்தம் அடைவதற்கு பதிலாக, அனைத்து விதமான துயரங்களை அல்லவா அடைகின்றார்கள்?

ஆகவே, பணம் சம்பாதிப்பதற்கு கஷ்டப்பட்டு உழைப்பதைக் காட்டிலும், ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்கள் ஏதுமின்றி, நம் உள்ளத்திற்கு இஷ்டப்பட்டு, ஈடுபாட்டுடன் உழைத்தால், அந்த உண்மை "**இன்பம்**" நம்மிடமே இருப்பு கொண்டுள்ளதை, நாம் எளிதாக அதே உள்ளத்தில் உணரவும் முடியும்.

இதற்கான ஒரு கதையைக் காணலாம்.

ஒரு இளைஞர் அந்த ஊர் பெரியவர் ஒருவரிடம் சென்று, ஐயா, எனக்கு இன்பம் அடைவது எப்படி என்று கூறவேண்டும் என்றான்.

அந்த பெரியவரும் இளைஞனைப் பார்த்து எதுவும் கூறாமல், அமைதியாகப் புன்முறுவல் மட்டும் பூத்தார்.

இதனால், இன்னும் சற்று கடுப்பாகிப் போன அந்த இளைஞன் அந்தப் பெரியவரைப் பார்த்து, இன்பத்தைக் காட்டிக் கொடுப்பீர்களா? மாட்டீர்களா? என்று ஆவேசமாகக் கேட்டான்.

இவரும் அந்த இளைஞனைத் தம்மோடு குளிப்பதற்காக அருகே உள்ள ஆற்றுக்கு நீராட அழைத்துச் சென்றார். அவன் நீருக்குள் இறங்கி மூழ்கியதும், முதியவர் அவனைப் பிடித்து, பலவந்தமாக நீரினுள் அமிழ்த்தி வைத்துக் கொண்டார்.

அவன் திணறிப்போய் வெளியே வரப் போராடினான். சிறிது நேரம்வரை, அவனை நீரின் வெளியே வர, அவர் விடவே இல்லை.

சற்றுநேரத்தில், அவனுக்கு மூச்சு முட்ட ஆரம்பிக்கவே, அவனை நீருக்குள் அழுத்துவதிலிருந்து வெளியே விட்டார். அவனும் தலையை உடனே வேகமாக வெளியே தூக்கினான்.

அவன் அவரைக் கோபமாகப் பார்த்து, என்ன என்னைக் கொல்லப் பார்க்கின்றீரா? என்று கேட்டான்.

அதற்கு அந்தப் பெரியர் சிரித்தபடி, அவனைப் பார்த்து, நீ! நீரினுள் மூழ்கி இருந்த போது உனக்கு என்ன தேவையாக இருந்தது?

அது இன்பமா? அல்லது உன் உண்மை இயல்பா? என்று கேட்டார்.

அதற்கு அவனும், நான் உயிர்வாழத் தேவையான என் இயல்பை, என் இருப்பை உடனடியாக அடைந்தாக வேண்டும் என்று இருந்தது என்றான்.

அவர் அப்பொழுது உனக்கு இன்பம் தேவை என்று தோன்றவில்லையா? என்று கேட்டார்.

அதற்கு அவனும் இல்லை ஐயா!

என் உண்மை இயல்பாகிய இருப்பில், நான் எப்பொழுதும் இருந்தாலே, அதுவே என் **இன்பம்** என்பதை உணர்ந்துக் கொண்டேன் என்றான்.

ஆக, **இன்பம்** என்பது, எப்போதும் நம்மிடம் உள்ள நம் உண்மை இயல்பு, ஆனால், நாம் அந்த உண்மையை உணராமல், அற்ப விசய, சுகங்களில் இன்பம் இருப்பதாக நினைத்துக் கொண்டு, அதை வெளியே தேடுகின்றோம்.

அந்த வகையிலே, அந்த ஆசை உணர்வு (இன்பம்) நம்மிடம் இருப்பதை நாம் நன்கு அறிந்துக் கொண்டால், அந்த உணர்வே இறைவன், அந்த உணர்வே ஆனந்தம், அந்த உணர்வே அறிவு என்பதும் புரிய வரும்.

மற்றபடி வெளியே இருந்து ஏற்றி வைத்துக் கொண்ட ஏராளமான எண்ணங்களின் வடிவாகிய புற அறிவு புத்தகங்கள் எதுவானாலும், அது ஆன்மீகமோ, அறிவியலோ அது அக அறிவாகிய நம் இயல்பு உணர்வுக்கு முன்னால் இன்பமாகாது.

எனவே, இன்பத்தை அடைவதற்காக, ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களினால், அந்த இன்பம் வெளியே உள்ள பணம், பதவி, பொருட்கள் போன்றவைகளில் உள்ளது என்று

கருதுகின்றவரை, நம் உண்மை இயல்பான இன்பத்தை என்றுமே உணர முடியாது.

அதாவது, இஷ்டப்பட்டு உழைப்பவர்கள், அவர்களின் இயல்பு உணர்வுக்கு (அறிவுக்கு) விரோதமான காரியங்களை என்றுமே செய்ய மாட்டார்கள்.

ஏனெனில், அந்த ஆன்மா (அறிவு) குடிகொண்டுள்ள கோயிலாக, அவர்கள் உள்ளம் இருப்பதினால், அவர்கள் ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களில் என்றுமே சிக்க மாட்டார்கள்.

அத்தகைய சிறந்த அறிவாகவே இருக்கின்ற பலரை நம்முடைய நடைமுறை வாழ்க்கையில் நாம் காணவும் முடியும்.

அவர்களில் ஒருவராக இன்றைய விளையாட்டு வீரரை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் அதிகம் நேசிக்கின்ற அந்த ஆசைப்பட்ட, விளையாட்டை கஷ்டப்பட்டு விளையாடுவாரா? அல்லது இஷ்டப்பட்டு விளையாடுவாரா?

அதுப்போன்றே, ஒரு பாடகர் அல்லது ஒரு மியூசிக் டைரக்டரை எடுத்துக் கொள்ளுங்கள். அவர்களும் ஆடியோ ரெகார்டிங் தியேட்டருக்குச் சென்று, கஷ்டப்பட்டு பாடுவாரா? அல்லது இஷ்டப்பட்டு பாட்டை பாடுவாரா?

சற்றே சிந்தித்துப் பாருங்கள்!

இவர்கள் யாருமே உண்மையில் அந்த பணத்திற்காக பாடுபடவில்லை. ஆனால், அவர்களுக்கு பிடித்தமான உணர்வுப் பூர்வமான காரியங்களை கண்ணும், கருத்துமாக கருதினர். அதை உண்மையாக நேசித்தனர். அதனை அன்பு செய்தனர்.

அந்த தூய அன்பு உணர்வு அவர்களிடம் இருந்ததால், அந்த காரியத்தை அற்புதமாகச் செய்தனர். அதன் காரணமாக அதில் வெற்றியைக் கண்டனர். அதன் பயனாக அவர்களுக்கு **பணம், பதவி, பட்டம்** என எல்லாமே கிடைத்து விட்டது.

இதுதான் உண்மை உணர்வை உணர்ந்தவர்களின் உன்னத நிலை. இவர்கள் எப்பொழுதும், அந்த உன்னதமான தூய உணர்வில் ஒன்றியவர்களாக இருக்கின்றனர்.

ஆனால், நாம் என்ன செய்துக் கொண்டு உள்ளோம்?

எப்படிப்பட்ட வாழ்க்கையை எல்லோரும் வாழ்ந்துக் கொண்டு இருக்கின்றோம்?

பொதுவாக, நமக்கு இஷ்டமான இன்பம் நமது உண்மை இயல்பாகவே இருப்பதை அறியாமல், அதற்கு விரோதமாக கஷ்டமான பல காரியங்களை கட்டாயமாகச் செய்துக் கொண்டு இருக்கின்றோம்.

அந்த காரியத்தை ஏதோ கடமைக்கு செய்கின்றோம்.

ஆகவே, **ஆனந்தத்தை அடைவதற்கு நம் உண்மை இயல்புக்கு விரோதமாக கஷ்டப்பட்டு வெளியே உழைப்பதைக் காட்டிலும், இஷ்டப்பட்டு நம் உள்ளே உண்மை இயல்பில் இருந்தோமானால், அந்த உண்மை அறிவே ஆனந்தமாக நம் உள்ளத்தில் பிரகாசிப்பதை உணரவும் முடியும்.**

அதுவே, கஷ்டப்பட்டு செய்யப்படுகின்ற செயலில், நம் உண்மை இயல்பாகிய '**அறிவு**' ஏற்றி வைக்கப்பட்ட அற்ப எண்ணங்களினால் மறைக்கப்படும் பொழுது, நம் உள்ளம் உண்மையை உணர முடியாமல், நாம் தோல்விகளைத் தழுவி, துயரத்தை அடைகின்றோம்.

இஷ்டப்பட்டு தன் உண்மை இயல்பில் உள்ளபடி இருந்துக் கொண்டு, உழைப்பால் உயர்ந்த வெற்றியாளர்கள் யாருமே வெளியே இன்பத்தை தேடி, எங்கும் அலைந்தவர்கள் அல்ல.

அவர்கள் தாங்கள் செய்கின்ற செயல்களை, தங்கள் உண்மை இயல்புக்கு விரோதம் இல்லாமல், விவேகத்துடன் விழிப்புற்ற புத்தியினால், அந்த உண்மை அறிவாகவே இருந்துக் கொண்டு, ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்கள் இல்லாமல், "**நான் செய்கிறேன்**" என்ற ஆணவம் கொள்ளாமல், அந்த ஆனந்த இருப்புடன் அமைதியாக இருந்துக் கொண்டு, "**இன்பம்**" என்பதை தம் இயல்பாகவே கொண்டுள்ளார்கள்.

அடுத்து, இன்னும் ஒரு கதையின் வாயிலாக இந்த இன்பத்தை அலசலாம்.

ஒரு பணக்காரன், தன்னிடம் உள்ள விலையுயர்ந்த தங்கம், வைரம், வைடூரியம், மற்றும் பல அழகிய நவரத்தினக் கற்களையும் எடுத்துக்கொண்டு, ஒரு எளிய சாதுவை சந்தித்து, அவரிடம் சுவாமி!, எனக்கு எவ்வளவுதான் பணம், பதவி, புகழ், சொத்து, மனைவி, மக்கள் என எல்லாம் இருந்தும், மகிழ்ச்சி என்ற சுகம் மட்டும் வரவே இல்லை.

ஆகவே, தாங்கள் இந்த விலையுயர்ந்த நவரத்தினக் கற்கள் மற்றும் தங்கம் முதலான பொருள்களை வைத்துக் கொண்டு, எனக்கு மகிழ்ச்சியை மட்டும் தந்து விடுங்கள் என்று வேண்டிக் கொண்டான்.

இவனது, கோரிக்கையை ஏற்ற, அந்த சாதுவும், சரி! அந்தப் பொருட்கள் உள்ள பெட்டியை இப்படிக் கொடு! என்று வாங்கிக்கொண்டு, அவன் சற்றும் எதிர்பாராத நேரத்தில், அந்த விலையுயர்ந்த பொருள்கள் அடங்கிய, அந்த பெட்டியை எடுத்துக்கொண்டு, அங்கிருந்து மிக வேகமாக ஓடத் தொடங்கி விட்டார்.

இவனுக்கு, உடனே ஒன்றும் புரிய வில்லை. பிறகு, சற்றே யோசித்துப் பார்த்தவன், உடனே சுதாகரித்துக் கொண்டு, ஐயோ!, இவர் போலி சாது போல உள்ளதே, இது தெரியாமல், இந்த விலையுயந்த பெட்டியைக் இவரிடம் கொடுத்து ஏமாந்து விட்டோமே, என்னே எனது முட்டாள்தனம் எனக்கருதியவாறு, அந்த சாதுவின் பின்னால், அவரைத் துரத்திக் கொண்டு இவனும் வேகமாக ஓடத் தொடங்கினான்.

ஓட்டத்தின் முடிவில், ஒரு இடத்தில் அந்த சாது, சற்று ஓய்வு எடுக்க அமர்ந்தார். அதுதான் சமயம் எனக்கருதி, இவனும் அவரைப் பிடித்துக் கொண்டு, அவரிடம் இருந்து அந்தப்பெட்டியை பிடுங்கிக் கொண்டு, அப்பாடா! என்னுடைய பொருள் எனக்கு கிடைத்து விட்டது. இப்பொழுதுதான் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கின்றது என்று கூறியபடி, அந்த சாதுவை வாய்க்கு வந்தபடி திட்டித்தீர்த்தான்.

அதுவரை அனைத்தையும் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த, அந்த சாது, அதன் பிறகு அவனிடம் பின் வருமாறு கூறத் தொடங்கினார்.

அடே மடையா!,

இதே பொருள்கள்தான் இதற்கு முன்பும் உன்னிடம் இருந்தது, அப்பொழுது உன்னிடம் உண்டாகாத மகிழ்ச்சி, இப்பொழுது மட்டும் எங்கிருந்து உனக்கு உண்டாகியது?

மூடனே, மகிழ்ச்சி என்பது எப்பொழுதும் உன்னிடம் உள்ள நிலையான ஒன்று. ஆனால், நீயோ அதை வெளியே எங்கோ இருப்பதாக நினைத்துக் கொண்டு, அதைத் தேடி, ஓடிக் கொண்டிருக்கின்றாய்.

போடா!, போய் உடனடியாக இந்த அழியக்கூடிய அற்ப பொருள்களின் மீதுள்ள பற்றை விட்டு விட்டு, என்றும் அழியாத அந்த பரம்பொருளை உன் உள்ளத்தினால் பற்று.

அப்படிப்பட்ட உள்ளம் உன்னிடம் உண்டாக வேண்டுமானால், உன் மனதில் ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களின் தொகுப்பாகிய மனம் என்ற மாயையை அறிந்து, அதன் ஆசைகளை துறந்து, விவேகத்தைக் கைக் கொண்டாயானால், நீ உன் உள்ளத்தில் அந்த உத்தமனைக் காண முடியும். அதுவே **அறிவு,** அதுவே **உணர்வு,** அதுவே **ஆன்மா,** அதுவே **ஆனந்தம்** ஆகும். என்று அவனுக்கு உபதேசித்து விட்டு, வேகமாக சென்று விட்டார்.

இந்த உண்மையான இன்பம் நம்மிடம் இருப்பதை நாம் அறியாமல், அற்ப பொருள்களை அடைந்து, அதன் வாயிலாக ஆனந்தம் கிடைப்பதாக கருதி, அல்லும், பகலும் அயராது உழைத்து, அங்கும், இங்கும் என எல்லோரும் அலைந்துக் கொண்டிருக்கின்றோம்.

அதேசமயம், என்றும் அழியாத அந்த அற்புதப் பொருளை அறிந்துக் கொள்ளாமல், அனேக விதமாக ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான எண்ணங்களை "**அறிவு**" என்று கருதிக்கொண்டு, என்றும் நிலையாக இருக்கின்ற அந்த மெய்யறிவை, உயர் ஞானப்பொருளை உள்ளத்தில் உணர்வாய் (அறிவாய்) உணர மறுக்கின்றோம்.

இதைத்தான் திருக்குறளும் தெளிவு படுத்துகின்றது.

**எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்**

**மெய்ப்பொருள் காண்பது அறிவு. (திருக்குறள்** 355).

எந்த ஒரு பொருளும், எத்தகைய தன்மை உடையதாக இருப்பினும், அந்தப் பொருளைப்பற்றிய அறிவை, அறியக் கூடிய, உண்மை அறிவாகிய “**மெய்ப்பொருள்**” இருப்பதை அறிவதே அறிவு.

அந்த அறிவை அறிந்த அறிஞர்களே (ஞானிகளே) அதுவாக ஆகின்றனர். அவர்களே ஏற்றி வைக்கப்பட்ட புற அறிவு ஏதுமின்றி, அந்த அறிவாகவே இருந்து அனைத்து சாஸ்திரங்களையும் படைத்தனர்.

**அறிவுடையார் எல்லாம் உடையர் அறிவிலார்**
**என்னுடைய ரேனும் இலர். (திருக்குறள் 430).**

அந்த மெய்யறிவை அறிந்துக் கொண்டு, அதுவாகவே மாறிய, அறிவுடைய அறிஞர் பெருமக்கள் அனைத்தையும் அறிந்தவர்களாக எல்லம் உடையவர்களாக உள்ளனர்.

அதுவே, அந்த உண்மை அறிவை அறிய முடியாமல், அறியாமையில் உள்ளவர்கள் ஏற்றி வைத்துக் கொண்ட எராளமான எண்ணங்களாக எதை அறிந்து வைத்திருந்தாலும், அவைகளால் அவர்களுக்கு பயன் ஒன்றுமில்லை எனலாம்.

**அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்**
**புறத்த புகழும் இல. (குறள் 39).**

அறவழியில் நின்று, தனிமனித ஒழுக்கத்தின் வாயிலாக, முறையாக வருவதே, நிறைவாகிய நிலையான இன்பம் என்றும், பிற வழிகளில் அடைய விரும்பும் இன்பங்கள்

எல்லாமே, ஒரு குறுகிய கால மகிழ்ச்சியை மட்டுமே தருகின்ற, நிலையற்ற இன்பமாக இருப்பதினால், அவ்வழியில் அடையும் இன்பங்கள் நமக்கு புகழை சேர்க்காது என்பதாக இந்தக் குறள் கூற வருகின்றது.

அதாவது, இன்பமும், அழகும் அதை அனுப்பவிக்க விரும்புகின்ற புலன்களின் உணர்ச்சியை சார்ந்தவைகள்.

அந்த வகையிலே, இயற்கையின் அழகில் இன்பம், கேட்கும் இசையினில் இன்பம், வரண்ட நாவுக்கு நீர் இன்பம், வற்றிய வயிற்றுக்கு உணவு இன்பம், பக்தியில் திளைத்து இருப்போர்க்கு பரமனே இன்பம், குழந்தையின் மழலை மொழி மகத்தான இன்பம், இதமான தென்றல் காற்று வீசும் போது இன்பம். ஆக, இந்த இன்பங்களில்தான் எத்தனை எத்தனை வகைகள்?

இவைகள் எல்லாவற்றையும் விட, புலன் இன்பங்களைக் கடந்த, பூரண இருப்பின் இயல்பை உணர்வதே என்றும் நிலையான இன்பம் என்கின்றனர், அந்த உண்மை இன்பத்தை உள்ளத்தில் உணர்ந்த உத்தம ஞானிகள்.

இவர்களுக்கு மட்டும் இது எப்படி சாத்தியம் ஆனது?

அதாவது, எங்கும், எப்பொழுதும் '**இருப்பு**' கொண்டுள்ள எல்லையற்ற அந்த "**அறிவு**" (ஆன்மா) ஒன்றே எல்லாவற்றின் உள்ளும், புறமும் ஒன்றி இருப்பதினால், அந்த அறிவின் இயல்பாகிய '**இன்பம்**' என்பது, எல்லோருக்கும் பொதுவானது.

அதை அறியாமல், ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களால், இன்பத்தை எங்கோ வெளியே தேடி அடைய முயற்சிப்பது '**அறியாமை**' என்றே சாஸ்திரம் அழைக்கின்றது.

'***அறம்***' என்ற தனிமனித "**உண்மை**".

'***பொருள்***' என்ற பரம்பொருளைப் பற்றிய "**அறிவு**".

ஆகிய இந்த இரண்டும் (துவைதம்) இருமைகளின்றி, ஒன்றாய் (அத்வைதம்) இணையும் பொழுது, இயல்பாகவே இந்த '***இன்பம்***' இருப்பு கொண்டுள்ளதை அறிவதே "**ஆனந்தம்**".

அதுவே, "**சச்சிதானந்தம்**" எனவும் கூறப்படுகின்றது.

அதாவது, ***அறம் + பொருள் + இன்பம்*** = **வீடுபேறு**.

***உண்மை + அறிவு + ஆனந்தம்*** = **சத்சிதானந்தம்**.

இந்த '**ஆனந்தம்**' என்பது, என்றோ, எப்பொழுதோ இனி வர இருக்கின்ற எதிர்காலத்திலோ இல்லை.

இன்றே, இப்பொழுதே, இந்த விநாடியே நம்முடைய நிகழ்காலத்தில் இருக்கின்றது.

நம்முடைய ஒவ்வொரு நிகழ்வையும், நடைமுறையில் நிகழ்காலத்தில், அந்த இருப்பின் இயல்பில் இருந்துக்கொண்டு,

எல்லாவற்றையும் வெறும் சாட்சியாக வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருக்கின்ற வெட்டவெளிப் போன்று, இந்த பூமியில் குண்டு வெடித்தாலும், கோயில் கும்பாபிஷேகம் நடந்தாலும், இந்த இரண்டிலுமே கலந்துக் கொள்ளாமலும், அவைகளினால் பாதிப்புக்கு உட்படாமலும், அவைகளைப் பற்றி விமர்சனங்கள் எதுவும் செய்யாமலும் சும்மா இருக்கின்ற சுகத்தில் இருப்பதே '**சுத்த அறிவு**' (consciousness) எனப்படுகின்றது.

அதைவிடுத்து, அன்று அப்படி நடந்தது, இன்று இப்படி ஆகிவிட்டது, நாளை எப்படி ஆகுமோ? என்று எதையாவது ஒன்றைப் பற்றிக் கொண்டு, அதற்காக மனதில் ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களால் ஏராளமான ஆர்ப்பாட்டங்களை செய்துக் கொண்டு, இந்த விநாடியைக் கூட இனிதாக வாழ முடியாமல், வீணாக காலத்தைக் கழித்துக் கொண்டு, அதிக கவலைகளினால் உந்தப்பட்டு, உணர்ச்சிக் கொந்தளிப்பில் உண்டாகின்ற, ஏராளமான எண்ணங்களின் மொத்த தொகுப்பே "**மனம்**" (Knowledge) எனப்படுகின்றது.

எனவே, நம்முடைய விழிப்புநிலை அவஸ்தையில், விழித்துக் கொண்ட விழிப்புற்ற புத்தியினால், விவேகத்துடன் உண்மை உணர்வாகிய அந்த ஆன்ம அறிவை (இருப்பை) உணர்ந்து, அதுவாகவே மாறி, அந்த ஆனந்த அனுபவத்தை அடைவதைத்தான் நிறைவான, என்றும் நிலையான "**இன்பம்**" என அறிய வேண்டும்.

யார் இந்த அரிய உண்மையை ஆழமாகப் புரிந்துக் கொண்டு, நிலையான இன்பத்தை, நிறைவாக அனுபவித்து,

முழுமையான திருப்தியை அடைகின்றார்களோ, அவர்களே '**அறம், பொருள், இன்பம்**' என்ற மூன்றும், ஒன்றே என உணர்ந்து, உன்னதமான அந்த இருப்புடன் இரண்டறக் கலந்து பிறவாப் பெருநிலையான "**வீடுபேறு**" என்ற மோக்ஷத்தை அடையத் தகுதியுடைய அதிகாரிகள் ஆகின்றார்கள்.

## 6. மோக்ஷம் (வீடுபேறு)

வீடுபேறு அல்லது மோக்ஷம் என்ற வார்த்தையை கேட்டவுடன் பெரும்பாலானவர்கள் மனிதன் இறந்த பிறகு அடையக்கூடிய ஒரு உன்னத நிலை என்றும், அது பிறவாப் பெருநிலை என்றும் அறிந்து வைத்துள்ளனர்.

அத்துடன் இன்னும் சிலர், இந்த சீவான்மா உடலை விட்டபிறகு, மற்றொரு உடலில் சென்று, பரமான்மா வாழும் இடமாகிய வைகுண்டத்தில், அல்லது கைலாசத்தில் அவருடன் ஆனந்தமாக வாழக்கூடிய, அற்புத சூழலில் உள்ள ஒரு உலகம், இந்த பூமியைப் போன்று காணப்படும் என்று கருதிக் கொள்கின்றனர்.

இவைகள் எல்லாமே ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களின் தொகுப்பாகிய மனதின் கற்பனைகள் எனலாம்.

அந்த ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களின் கற்பனைகள் காரணமாக, ஸ்ரீமன் நாராயணன் பக்தர்கள் **வைகுண்டம்** செல்வதை **மோக்ஷம்** என்றும், சிவ பக்தர்கள் **கைலாஸம்** செல்வதை **மோக்ஷம்** என்றும் கருதுகின்றனர்.

உண்மையிலேயே, சாஸ்திரம் கூற வருகின்ற '**வீடுபேறு**' என்ற "**மோக்ஷம்**" என்பது, மனிதன் வாழும் பொழுதே, ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களின் தொகுப்பாகிய மனதிலிருந்து விடுதலைப் பெற்று, அந்த அறிவாகவே தன்னை அறிந்து, அந்த மகத்தான அறிவுடன் ஆனந்தமாக இணைந்து இருக்கின்ற "**இருப்பு நிலை**" அனுபவத்தை அல்லது '**பேருணர்வு பெருநிலை**' அடைவதை "**மோக்ஷம்**" (வீடு) என்கின்றது.

தமிழ் மொழியில் இதனை '**வீடு**' என்று வழங்கக் காரணம், அது ஒன்று மட்டுமே என்றும் இருக்கின்ற '**இருப்பு**' நிலையான, அந்த உன்னத உணர்வில் நாம் தங்கியுள்ள நம் நிலையான '**சொந்த வீடு**' என்கின்றது.

அதைவிடுத்து, உண்மை உணர்வாகிய '**சுத்த அறிவு**' என்று அழைக்கப்படுகின்ற நான், ஒரு அறிவு தாவரம் முதல் ஆறு அறிவு மனிதன் வரை பல்வேறு உடல்களில் வந்து, போகின்ற '**வாடகை வீடு**' மட்டுமே இந்த உடல்கள், உலகம் எல்லாமே என்கின்றது.

எனவே, என் சொந்த வீட்டில் இருப்பதே எனக்கு சுகம்.

ஆகவே, அசைகின்ற அனைத்து உடல்களிலும், அசைவற்ற, ஆனந்த அறிவாக, உண்மை உணர்வாக உள்ள "**நான்**" எதனாலும் பாதிப்புக்கு உட்படுத்த முடியாத, பிறப்பு, இறப்பு என்ற சம்ஸாரத்தில் சிக்கிக் கொள்ளாத, ஆக்கவும், அழிக்கவும் அற்ற, என்றும் இருக்கின்ற "**இருப்பு**" என்சொரூபம் என்பதினால், என் அறிவுணர்வு மையத்தின் அம்சமாக வெளிப்பட்ட இந்த படைப்பு என்பது, "**மனம்**" என்ற மாயா பிரபஞ்சமாக மாறி, தோற்றத்திற்கு வந்ததாகத் தோன்றுவது, அந்த மனதின் மயக்கம் என்று அறியப்பட வேண்டும்.

இந்த உணர்வு நிலை அல்லது அறிவு நிலை பரிமாணம் என்பது, "**நான்**" என்ற தன்னுணர்வு முனைப்பாக வெளிப்பட்டு, '**நான்**' இருப்பதினால்தான், இந்த உலகம் இருப்பது போலத் தோன்றுகிறது.

**"ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ர தாரகம்**
**நேமா வித்யுதோ பாந்தி குதோயமக்னி |**
**தமேவ பாந்தமனுபாதி ஸர்வம்**
**தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி" ||** (கட உபநிஷதம்)

அங்கே, சூரியன் ஒளிர்வதில்லை, சந்திரனும், நட்சத்திரங்களும் ஒளிர்வதில்லை, மின்னல் ஒளிர்வதில்லை. அப்படி இருக்க, இந்த அக்கினி (விளக்கு) மட்டும் எப்படி ஒளிர முடியும்?

ஒளிர்கின்ற அறிவாகிய என்னை அனுசரித்தே, எல்லாம் ஒளிர்கின்றன. அனைத்துமே “**நான்**” இருப்பதினால்தான், என்னுடைய பிரகாசத்தினால் மட்டுமே ஒளிர்கின்றன.

அத்தகைய இந்த “**நான்**” என்பதற்கு ஆதாரமானது எது? என்ற கேள்வியை எழுப்பி, அதற்கான பதிலை அறிய ஆர்வம் பிறந்தது?

ஆம்!

அந்த ஆர்வத்தினால், உண்டான என்னுடைய உன்னத அறிவு மையம், உணர்சிகளால் உண்டான உயிரினங்களின் பல்வேறு உடல்களின் மூலம், ஒரு அறிவு உடைய தாவரங்கள் முதல், ஆறறிவு கொண்ட மனிதர்கள் வரை, பிரதிபிம்பிக்கின்ற பொழுது, அந்த உடல்களின் தன்மைக்கு ஏற்ப, அவைகளின் **பிரஞ்ஞை (பேருணர்வு)** வெளிப்படுவது ஏற்றத்தாழ்வுகளுடன் காணப்படுகின்றது.

அதன் அடிப்படையில், அரிதான இந்த மனித உடல் கிடைத்த உயிரினங்கள் மட்டுமே, தனக்கு கொடுக்கப்பட்ட பிரத்யேகமான புலன்களாகிய புறக்கரணங்கள் மற்றும் அகக் கரணங்களைக் கொண்டு, “**நான்**” என்ற தன்முனைப்புக்கு காரணமான தன்னுணர்வு மையத்தை எளிதாக அறிந்து, அதன் உணர்ச்சிகளால் வெளிப்பட்ட பல்வேறு எண்ணக்குவியல்களின் ஒட்டுமொத்த தொகுப்பாகிய மனதைக் கடந்து, மகத்தான தன் சுயத்தை, எளிதாக அகத்தில் கண்டு கொள்ள முடியும்.

அந்த அகப்பயணத்தில் தாங்கள் கண்டறிந்த ஆழமான பல அரிய உண்மைகளை ஒன்றாகத் தொகுத்து, அதன் வாயிலாக அவர்கள் உணர்ந்த வந்த, அந்த உன்னத அறிவை "**வேதங்கள்**" என்கின்றோம்.

இந்த **வேதங்கள் என்பது, சமய நூல்கள்** அல்ல.

வேதங்கள் என்பது, அன்றைய ரிஷிகள் தங்கள் உள்ளத்தின் உள்ளே உணர்ந்து, வெளிப்படுத்திய அக உளவியல் உண்மைகளை தொகுத்து, அந்த பேருணர்வின் பெருமைகளாகப் பேசப்பட்டது.

வேதங்களில் **சிருஷ்டி** அல்லது **படைப்பு** பற்றிய தத்துவங்களைக் **கடவுளர்கள்** என்ற கருத்துக்கள் வழியாக வெளிப்படுத்தி விளக்கினார்கள்.

**பிரஜாபதி, விஷ்ணு, ருத்ரன்** என்றும், இந்திரன், அக்னி, வாயு, வருணன் என்றும், இயற்கையின் தத்துவார்த்தங்களைக் குறியீடுகளாகக் கொண்டு, அவர்கள் அகத்தில் அறிந்துக் கொண்ட ஆழ்தள உண்மைகளை அப்படியே அறிவித்தனர்.

இங்கே கூறப்படும் **படைப்பு** என்பது, அவர்களது **அறிவுணர்வு வெளியில்** நிகழ்ந்த '**படைப்பு**' ஆகும்.

அத்தகைய இந்த அறிவுணர்வு வெளியில் **அகம் - புறம்** என்னும் **இருமைகள்** எல்லாம் என்றுமே கிடையாது.

அந்த இருமைகளான பிரிவுகள் எல்லாம், இந்த பேருணர்வு பிரக்ஞையில், (அந்த அறிவாக) தன்னை அறிந்துக் கொள்வதற்கு முந்தைய நிலையாகிய அறியாமையில், அந்த உணர்ச்சிகளின் தொகுப்பாகிய "**மனம்**" காரணமாக இருந்தது.

தன்னை அறிய ஆதாரமாக இருந்த "**நான்**" என்னும் தன் முனைப்பின் மூலத்தை அறிந்து, அதை தன்னுணர்வு மயமாக அறிந்து, அதற்கான ஆதியைக் கண்டறிந்தார்கள்.

அதுவே, "**பிரம்மம்**" என்று குறிப்பிட்டார்கள்.

இதில், "**பிரம்மம்**" என்பது கடவுள் அல்ல. அது ஒரு '**தத்துவம்**' மட்டுமே ஆகும்.

அதுவும் அவர்களால் மற்றவர்களின் புரிதலுக்காக ஏற்றி வைக்கப்பட்ட '**நாமம்**' **(பெயர்)** என்றே கூறலாம்.

உண்மையிலேயே, அந்த பேருணர்வு பெரு நிலைக்கு, **நாம, ரூபங்கள்** எல்லாம் கிடையாது.

அந்த நாம, ரூபங்களின் வாயிலாக அறிவை அறிய எடுத்துக் கொண்ட முயற்சி, அறியாமையில் கொண்டு சென்று விட்டதினால், உண்டான சந்தேகத்தில் எழுந்த கேள்விக்கு விடை காண வேண்டிய கட்டாயம் உண்டாகி விட்டது.

அதிலே, பிரம்மம் என்பது என்ன?

என்ற கேள்வி எழும் பொழுது, அதற்கு அவர்கள் தந்த பதில், '**ப்ரக்ஞானம் பிரம்ம**' என்பது மட்டும்தான்.

அதாவது, **அறிவுணர்வுதான் (Consciousness) பிரம்மம்**.

அதுவே முழுமுதற்பொருள்.

இதில், '**நான்**' என்பது, அந்த பிரம்மத்தின் வெளிப்பாடு என்பதையும் உணர்ந்த அவர்கள், '**அஹம் பிரம்ம அஸ்மி**' (நானே பிரம்மமாக இருக்கிறேன்) என்றும், '**அஹம் ஆத்மா பிரம்ம**' (பிரம்மமே என் ஆத்மாவாக உள்ளது) என்றும் தெளிவாகக் கூறினார்கள்.

இந்த உண்மையின் வெளிப்பாடாகத்தான் பல்வேறு உபநிடதங்கள் '**நான்**' என்பதுதான் '**சுயம்**', என்றும், அதுவே '**தன் இருப்பு**' என்றும், அதுவே எல்லாமாகவும் பரிணமிக்கிறது என்றும் எடுத்துக் கூறினார்கள்.

இதற்கு ஆதாரமாக, பிருஹதாரண்யக உபநிடதத்தில், 'கணவன் மனைவியை நேசிப்பது மனைவிக்காக இல்லை, அவளது சுயமாகிய ஆன்மாவுக்காகவும், மனைவி கணவனை நேசிப்பது என்பது, உண்மையில் அவனுக்காக இல்லை. அவனது சுயமாகிய ஆன்மாவுக்காகவும் என, யாக்ஞவல்கிய முனிவர் தன் மனைவி மைத்ரேயியிடம் உபதேசிப்பதாக உள்ளது.

உண்மையில் வேதங்கள் உபதேசித்த உன்னதமான உயர் விசயங்கள், ‘**தன்னை அறியும் தன்னுணர்வே, அந்த அறிவு**’ என்றும், அந்த ‘**அறிவே கடவுள்**’ என்றும், அந்த கடவுளே “**நான்**” என்றும் எடுத்துக்கூற வருகின்றது.

அதையப்படியே வெட்ட வெளிச்சமாக வெளியிட்டால், எல்லோருக்கும் புரியாது என்பதினால், புராணக் கதைகளின் வாயிலாக சில தத்துவங்களை விளக்க முற்பட்டதின் விளைவாக விளைந்த விபரீதம், பல்வேறு மதங்களும், மத கடவுளர்களும், மத கோட்பாடுகளும், மத குருமார்களும் என ஏராளமான எண்ணங்கள் ஏற்றி வைக்கப்பட்டு, இன்றைய நிலையில் “**எல்லாமே எண்ணங்கள்**” என மாறி விட்டது.

இந்த ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களைப் பற்றிய, எதார்த்தத்தை அறியவேண்டுமானால், **அந்த உணர்வு வெளியை உணராமல்** முடியவே முடியாது.

“**உள்ளதல துள்ளவுணர் வுள்ளதோ வுள்ளபொரு**
**ளுள்ளலற வுள்ளத்தே யுள்ளதா லுள்ளமெனு**
**முள்ளபொரு ளுள்ளலெவ னுள்ளத்தே யுள்ளபடி**
**யுள்ளதே யுள்ள லுணர்வாயே யுள்ளே.**” - பகவான் ஸ்ரீ ரமணர்.

உள்ள பொருள் வேறு, உள்ளதென்ற உணர்வு வேறு என்ற இருமைகள் இங்கு மறுக்கப்படுகிறது.

"**உள்ளது எதுவோ,** அது இல்லாமல் **'உள்ளது'** என்ற உணர்வு உண்டாகுமோ?"...

அத்துடன் அனைத்திற்கும் ஆதாரமாக இருப்பது, அந்த "**உள்ளது**" (**இருப்பு**) மட்டுமே.

அடுத்த அடியில் வரும், "**உள்ள பொருள் உள்ளல் அற உள்ளத்தே உள்ளதால்**" என்பதில், எளிதாக அவர் கூற வருவது, உள்ளல் என்றால், நினைத்தல் என அறிந்து, அதை '**உள்ளல் அற**' (எண்ணங்களை விடு) என்கின்றார்.

அதாவது, "**எண்ணக் குவியல்களே மனம் என்பதினால், இந்த மனம் எதிலிருந்து எழுந்து, எதிலே ஒடுங்குகிறதோ, அதுவே என்றும் உள்ள உண்மைப் பொருள்**" என்கின்றார்.

அந்த உள்ள பொருள் எண்ணங்களற்று உள்ளத்தில் உணர்வாக '**இருப்பு**' கொண்டுள்ளது.

அதை உள்ளபடி உணர்வதே உணர்வு வெளியாகிய "**நான்**" என்ற தன்னுணர்வின் '**இருப்பு**' எனப்படுகின்றது.

அதுவே அறிவு. அதுவே உணர்வு அல்லது பிரம்மம் எனப்படுகின்றது.

# 7. அறிவு - அறியாமை

இதிலே, மோக்ஷம் (வீடுபேறு) என்பது யாருக்கு?

அழியக்கூடிய உடலுக்கா?

என்றும் அழியாத உணர்வின் இருப்புக்கா?

உண்மையிலேயே **வீடுபேறு** அல்லது **மோக்ஷம்** என்பது அடையக்கூடிய ஒன்று அல்ல!. அது எப்பொழுதுமே இருக்கின்ற "**இருப்பு**" என்பதை அறியாமையில் உள்ள "**மனம்**" அறிந்துக் கொள்ள வேண்டிய ஒன்று.

அந்த உண்மையை "**மனம்**" அறிந்துக் கொண்டால், அதுவே, நமது இயல்பு நிலையான (நமது இலட்சியமான) புருஷனின் இன்பம் (ஆசை) ஆகிய "**புருஷார்த்தம்**" ஆகின்றது.

அப்படியானால் புருஷன் என்பது யார்?

புருஷன் என்பதை **ஆண்** அல்லது **மனிதன்** என்று நாம் எடுத்துக் கொண்டாலும், **ஈஸ்வரன் (விஷ்ணு)** என்று எடுத்துக் கொண்டாலும், புருஷன் என்பது, கால, தேசங்களைக் கடந்த, எல்லையற்ற அந்த **அறிவை (ஆன்மாவை)** மட்டுமே, அது குறிக்கின்றது. இதற்கு வேதமே முழு முதற் பிரமாணம் ஆகும்.

ஆகவே, அந்த **‘அறிவை அறிவால் அறிவது’** மட்டுமே **“புருஷார்த்தம்”** எனப்படுகின்றது.

**அறியாமை விட்டு அறிவு இன்றாம் அறிவு விட்டு அவ்**
**அறியாமை இன்று ஆகும் அந்த - அறிவும்**
**அறியாமையும் ஆர்க்கு என்று அம் முதலாம் தன்னை**
**அறியும் அறிவே அறிவு. -** பகவான் ஸ்ரீரமணர்.

**அறிவு - அறியாமை** என்பது, நாணயத்தின் இரு பக்கங்களைப் போன்றது என்கின்றார் பகவான் ஸ்ரீரமணர்.

அதாவது, அறிவை விட்டு அறியாமை இல்லை என்பதினால், இந்த இரண்டும் யாருக்கு உள்ளது? என்று கவனிக்கின்ற பொழுது, அறியாமையை எது அறிந்துக் கொள்கின்றதோ, அதுவே **“அறிவு”** என்றும் கூறுகின்றார்.

அதாவது, கலங்கமற்ற பளிங்கு போன்ற கண்ணாடி ஸ்படிகத்தின் அருகே ஒரு செம்பருத்தி மலரை வைத்து விட்டால், அந்த செம்பருத்தி மலரின் சிகப்பு நிறம், அந்த ஸ்படிகத்தின் மீது பிரதிபிம்பிக்கும்.

இந்த நிலையில், அந்த ஸ்படிகத்தின் மீது ஏற்றி வைக்கப்பட்ட சிகப்பு நிறத்தை அகற்ற வேண்டுமானால், அந்த ஸ்படிகத்தை துணியால் துடைத்தாலோ, அல்லது நீரினால் கழுவினாலோ, அந்த ஸ்படிகத்தின் சிகப்பு நிறம் மறைந்து விடுமா? என்ன?!...

முடியாது! அல்லவா?

காரணம், அந்த ஏற்றி வைக்கப்பட்ட சிகப்பு நிறம் அந்த ஸ்படிகத்தின் சுயமான நிறம் அல்ல.

அந்த ஸ்படிகம் செம்பருத்தி மலரின் சிகப்பு நிறத்தை வாங்கிக்கொண்டு, பிரதிபிம்பிப்பதினால், அவ்வாறு சிகப்பாக காணப்படுகின்றது.

இந்நிலையில், அந்த கண்ணாடி ஸ்படிகம் தன் இயல்புத் தன்மையான கலங்கமற்ற பளிங்குப் போன்று, பழையபடி மாற வேண்டுமானால், செம்பருத்தி மலரை ஸ்படிகத்தின் அருகே இருந்து நீக்கினால் மட்டும் போதுமானது.

அதுப்போன்றே, அந்த “**அறிவு**” அறியாமை அடைந்தது போன்று காணப்படுவதற்குக் காரணம், அதன்மீது ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணக் குவியல்களின் காரணமான “**மனம்**” இருப்பதினால்தான், “**அறிவு**” அறியாமை அடைந்தது போன்று காணப்படுகின்றது.

ஆக, அந்த “**அறிவு**” தன் இயல்பான பிரகாசத்தை வெளிப்படுத்த வேண்டுமால், ஏற்றி வைக்கப்பட்ட எண்ணக் குவியல்களை கொண்ட “**மனம்**” என்பதை நீக்கினால் மட்டும் போதுமானது.

மனம் என்பதை எப்படி இல்லாமல் நீக்குவது?

மனம் இல்லாமல் மனிதன் எப்படி வாழ்வது?

அந்த மனதை நீக்கும் மகத்தான வழிமுறைகளைத்தான் சாஸ்திரம் "**புருஷார்த்தம்**" என்றே எடுத்து விளக்குகின்றது.

அதாவது, ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணக் குவியல்களால், தன்னை இன்னார், இன்னாருக்கு கணவன், இன்னாருக்கு மனைவி, இது என் பெயர், இது என் குடும்பம், இது என் ஜாதி, மதம் என ஏராளமான விசய, சுகங்களில் சிக்கிக் கொண்ட "**மனம்**" ஏற்றிக் கொண்ட ஆசைகளினால், அறியாமையில் சிக்கிக் கொண்டு உள்ளது.

அந்த '**உள்ளல்**' உள்ளவரை தன் உண்மை "**உணர்வை**" (அறிவை) அறிய முடியாமல், அதற்கான இலட்சியத்தை சரியாகத் தேர்வு செய்ய முடியாமல், தடுமாறுகின்ற மனம் கொண்டவர்களைக் கண்ட அறிந்த அறிஞர் பெருமக்கள், அவர்களது பெருங்கருணையினால் காட்டிக் கொடுத்த தர்மமே '**சனாதன தர்மம்**' ஆகும்.

அந்த தர்மத்தின் வழி நின்று வந்தவர்கள் உபதேசித்த "**வேதங்கள்**" வேண்டிய அளவு பல வழிகளில் பலவாறாகப் பல நுணுக்கங்களைக் கையாண்டு, எப்படியாவது, எந்த வகையிலாவது, புருஷ(தன்)னைப் புரிய வைக்க வேண்டும் என்று பல்வேறு உபதேசங்களை "**உபநிடதங்கள்**" வாயிலாக எடுத்துக் கூறியது.

ஆனால், அறியாமையின் உச்சத்தில் உள்ள உத்தம புருஷர்கள் தங்கள் உண்மை சொரூபத்தை அறியாமல், ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களில் சிக்கி கொண்டு, பல்வேறு மதங்கள், சமயங்கள், சம்பிரதாயங்கள், சடங்குகள், சாஸ்திரங்கள் என எதையும் விடுவதற்கு மனதில் இடமின்றி இன்னும், இன்னும் ஏற்றிக் கொண்டு இருக்கின்றனர்.

இதுமட்டும் போதாது என்று, இந்த உண்மையை உபதேசிக்க வந்து, அதை வாழும் பொழுதே அனுபவமாக வாழ்ந்து வழிகாட்டிய பல்வேறு அறிஞர் பெருமக்களின் அரிய பல தத்துவ விளக்கப் பாடல்களை, படித்து, அதன்படி வாழ்க்கையில் நடைமுறைக்கு வந்து, அதை அனுபவமாக அறியாமல், அரியாமையினால், அந்த பாடல்களை மற்ற தேவாரம், திருவாசகம் போன்ற பக்திப் பாடல்கள் போன்று, மனதில் '**மனப்பாடம்**' செய்துக் கொண்டு, அவைகளை ஏற்றி வைக்கப்பட்ட எண்ணக் குவியல்களாக மாற்றிக் கொண்டு, மனமற்ற நிலையில், அந்த உணர்வுப் பொருளான "**அறிவை**" அறிய முடியாத பாமரர்களாகவே இன்னும் இருக்கின்றனர்.

இவர்களைப் போன்ற பாமரர்கள் இருக்கும் வரை, மதங்களையும், மதக் கோட்பாடுகளையும், சமயங்களையும், சடங்கு, சம்பிரதாயங்களையும் நன்கு வளர்த்துக் கொண்டு, அவைகளைப் பிடித்துக் கொண்டு, விடமுடியாத வெறியர்களாக அவர்களை மாற்றிக் கொண்டிருக்கின்ற மட்டமான குருமார்கள், தங்கள் வயிற்றுப் பிழைப்புக்காக, இதுபோன்ற அதர்ம காரியங்களை செய்துக் கொண்டுள்ளனர்.

சனாதன தர்மத்தின் சத்திய உபதேசம் என்பது, படைக்கப்பட்ட பல்வேறு உயிரினங்களிலேயே, அரிதான மனிதப்பிறவி கிடைத்துள்ள “**மனிதன்**” மட்டுமே மகத்தானவன் ஆதலால், அவனது பிரத்யேகமான ஆறாம் அறிவாகிய “**பகுத்தறிவு**” கொண்டு, தன்னை “**நான் யார்**?” என்று மனதினால் விசாரித்து, அந்த “**அறிவை அறிய முடியாத அறியாமையை அறிவதே**”, அறிய வேண்டிய ‘**அறிவு**’ என்கின்றது.

இந்த உண்மையை நன்கு உணர்ந்துக் கொண்டு, அந்த உன்னத உணர்வாகிய “**நான்**” என்ற தன்னுணர்வில் “**இருப்பு**” கொள்வது மட்டுமே மனிதப் பிறவியின் மகத்துவம் ஆகும்.

அதைவிடுத்து, அனாவசியமான உலக விவகாரங்களில் ஈடுபட்டுக் கொண்டு, மற்றவர்களைப் பற்றி மட்டமாகப் பேசிக்கொண்டு, ‘**சும்மா இரு**’, ‘**சொல் அற**’ என்ற உபதேசத்தை உண்மையில் கடைப்பிடிக்காமல், கடைத்தேற முடியாது என்பதை எடுத்துக் கூறுவதே “**சனாதன தர்மமும், சத்தியமும்**” ஆகும்.

**ஓம் தத் சத்!**

# சனாதன தர்மமும்! சத்தியமும்!

சுவாமி பிரபஞ்சநாதன்



பராவித்யா வழங்கும்

பரம[தன்]னை அறியும் பாடங்கள்